## *காஞ்சனை*

[கலைமகள், ஜனவரி, 1943]

தென்னாலிராமன் கறுப்பு நாயை வெள்ளை நாயாக்க முடியாது என்பதை நிரூபித்தான். ஆனால் என் மனைவி பிச்சைக் காரிகளையும் நம்மைப் போன்ற மனிதர்களாக்க முடியும் என்பதை நிரூபித்தாள்.

.. .. .. .. .. .. .. ..

வலுக்கட்டாயத்தின் பேரில் சிரிப்பை வருவித்துக் கொண்டு நுழைந்த என்னை, "பொம்பளைகள் வேலை செய்கிற எடத்தில் என்ன உங்களுக்காம்?" என்ற பாணம் எதிரேற்றது.

.. . .. .. . . .

காஞ்சனை என்பவள் கீழே முன் கூடத்தில் படுத்துக்கொண்டாள்.

.. . . . . . .

"என்ன, வரவரத்தான், இப்படித் தூங்கித் தொலைக்கிறது. காப்பி ஆறுது!" என்று என் மனைவி எழுப்பினாள்.

. . . . . . .

காலையில் காப்பி கொடுக்கும்போது, "இந்த ஆம்பிளைகளே இப்படித்தான்!" என்றாள் என் மனைவி. இதற்கு என்ன பதில் சொல்ல?

*****************************




Sometimes dead is better.

**<< Pet Sematary**



**_செல்லம்மாள்_**

[கலைமகள், மார்ச், 1943]

ஒரு பெரும்பளுவை இறக்கிக் கழுத்துக்கு ஆசுவாசம் கொடுப்பது போலவே, அவரது மனசிலிருந்தும் பெரும் பளு இறங்கியது. மனசிலே, மரணப் பிரிவினால் துன்பப் பிரவாகம் மதகுடைந்துக் கொண்டு பெருகி அவரை நிலைகுலையச் செய்யவில்லை. சுகதர்மிணியாக இருந்த ஒரு ஜன்மத்துக்குத் துன்பச் சுமை குறைந்துவிட்டது என்பதிலே அவருடைய மனசுக்கு ஒரு நிம்மதி.

. . . . . . .. . . . . . .

கீழே உட்காரவைத்து, நின்று தமது முழங்காலில் சாய்த்து வைத்துத் தவலைத் தண்ணீர் முழுவதையும் விட்டுக் குளிப்பாட்டினார். மஞ்சள் இருக்குமிடம் தெரியாததனால் அதற்கு வசதி இல்லாமற் போய்விட்டது. மேல்துணியை வைத்து உடலைத் துவட்டினார்.

மீண்டும் எடுத்துக்கொண்டு வந்து படுக்கையில் கிடத்தினார். அவளுக்கு என வாங்கிய பச்சைப் புடைவை அந்த உடலில் சுற்றிக் கட்டப்பட்டது. நெற்றியில் விபூதியும் குங்குமமும் இட்டார். தலை மாட்டினருகில் குத்துவிளக்கை ஏற்றி வைத்தார். எப்பொழுதோ ஒரு சரஸ்வதி பூஜைக்கு வாங்கிய சாம்பிராணி ஞாபகம் வந்தது. கனல் எடுத்து வந்து வைத்துப் பொடியைத் தூவினார். நிறை நாழி வைத்தார்.

*****************************




Education is the best provision for old age.
<< **Aristotle**

When marrying, ask yourself this question:
Do you believe that you will be able to converse well with this person into your old age?
Everything else in marriage is transitory.
<< **Friedrich Nietzsche**

All diseases run into one, old age.
<< **Ralph Waldo Emerson**

The tragedy of old age is not that one is old, but that one is young.
**<< Oscar Wilde**

I truly believe that age -- if you're healthy --
age is just a number.
**<< Hugh Hefner**

## *சாப விமோசனம்*

[கலைமகள், மே, 1943]

பட்டாபிஷேக வைபவத்தின்போது அயோத்திக்கு வருவதாக ஒப்புக்கொண்டிருந்தாள். ஆனால் அரண்மனைக்குள் ஏற்பட்ட உணர்ச்சிச் சுழிப்புக்குத்தான் என்ன வலிமை! ஒரே மூச்சில் தசரதன் உயிரை வாங்கி, ராமனைக் காட்டுக்கு விரட்டி, பரதனைக் கண்ணீரும் கம்பலையுமாக நந்திக்கிராமத்தில் குடியேற்றிவிட்டது.

மனுஷ அளவைகளுக்குள் எல்லாம் அடைபடாத அதீத சக்தி, ஏதோ உன்மத்த வேகத்தில் காயுருட்டிச் சொக்கட்டான் ஆடியது போல், நடந்து முடிந்தவிட்டது.

. . . . . . . . . . . . . . . .

அவள் மனசு ஒரேடியாகச் சுடுகாடு மாதிரி வெந்து தகித்தது. சிந்தனை திரிந்தது. "தெய்வமே! சாப விமோசனம் கண்டாலும் பாப விமோசனம் கிடையாதா?" என்று தேம்பினாள்.

. . . . . . . . . .

ராவணன் தூக்கிச் சென்றது, துன்பம், மீட்பு எல்லாவற்றையும் துன்பக்கறை படியாமல் சொன்னாள் சீதை. ராமனுடன் சேர்ந்து விட்ட பிறகு துன்பத்துக்கு அவளிடம் இடம் ஏது?

அக்கினிப் பிரவேசத்தைச் சொன்னாள். அகலிகை துடித்து விட்டாள்.

"அவர் கேட்டாரா? நீ ஏன் செய்தாய்?" என்று கேட்டாள்.

"அவர் கேட்டார். நான் செய்தேன்" என்றாள் சீதை அமைதியாக.

"அவன் கேட்டானா?" என்று கத்தினாள் அகலிகை. அவள் மனசில் கண்ணகி வெறி தாண்டவமாடியது.

அகலிகைக்கு ஒரு நீதி, அவனுக்கு ஒரு நீதியா?

ஏமாற்றமா? கோதமன் சாபம் குடலோடு பிறந்த நியாயமா?

இருவரும் வெகு நேரம் மௌனமாக இருந்தனர்.

"உலகத்துக்கு நிரூபிக்க வேண்டாமா? " என்று கூறி, மெதுவாகச் சிரித்தாள் சீதை.

"உள்ளத்துக்குத் தெரிந்தால் போதாதா? உண்மையை உலகுக்கு நிரூபிக்க முடியுமா?" என்றாள் அகல்கை. வார்த்தை வறண்டது.

நிரூபித்துவிட்டால் மட்டும் அது உண்மையாகி விடப்போகிறதா? உள்ளத்தைத் தொடவில்லையானால்? நிற்கட்டும். உலகம் எது?" என்றாள் அகலிகை.

.. . . . . . . . . . . . . . .

கோதமன் கைக்குள் சிக்கிக் கிடந்தது ஒரு கற்சிலை.

அகலிகை மீண்டும் கல்லானாள்.

மனச் சுமை மடிந்தது. . . . . . . . அவன்தான் கோதமன்.

அவன் துறவியானான்.







Women are cursed, and men are the proof.
**<< Roseanne Barr**

The curse of poverty has no justification in our age.
**<< Martin Luther King Jr.**

A great curse has fallen upon modern life with the discovery of the vastness of the word Education.
**<< Gilbert K. Chesterton**

We shall dig our own grave if we do not purge ourselves of this curse of untouchability.
**<< Mahatma Gandhi**

Good health and good sense are two of life's greatest blessings.
**<< Publilius Syrus**

What seems to us bitter trials are often blessings in disguise.
**<< Oscar Wilde**










India is the meeting place of the religions and among these Hinduism alone is by itself a vast and complex thing, not so much a religion as a great diversified and yet subtly unified mass of spiritual thought, realization and aspiration.
**<< Sri Aurobindo**

## கட்டிலை விட்டிறங்காக் கதை

[கலைமகள், ஜூலை, 1943]

முப்பத்தேழாவது பதுமை அட்டகாசமாய்ச் சிரித்து . . . வாரீர்! போச மகராசரே, உமக்கு இந்தச் சிங்காசனம் அடுக்குமோ, இது விக்கிரமாதித்த ராசாவானவர், பட்டி என்கிற மந்திரியோடு, காடாறு மாதமும், நாடாறு மாதமுமாய் அறுபத்தீராயிரம் வருஷம் வரை, மனு நெறி தவறாது, புலியும் புல்வாயும் ஓரிடத்துறையும் பெற்றி வழுவாது, அபேதமாக, அபூர்வமாக அட்டமா திக்குகளையும் கட்டியாண்டு, மூட்டைப் பூச்சிக்கும் முறைமை வழுவாது நடந்தமை அறியீரோ! அந்த மகராசனுடைய கீர்த்தி வல்லபங்களிலே ஆயிரத்தில் ஒரு பங்காவது உமக்கு உண்டோ எனக் கை மறித்தது.

. . . . . . . . . . .

அந்தப்பட்டணத்திலே, முந்தையோர் வரம்பின் முறைமை வழுவாது, மனுநெறி பிசகாது, மன்னவனாம் தென்னவனுக் கிளையான் இணையாரமார்பன், அஜமுகன் என்பான் அரசாட்சி செலுத்தி வந்தான். அவனுக்கு ஐம்பத்தாறாயிரம் பத்தினிமாரும், அதற்கு இரட்டிப்பங்கு வைப்பாட்டிமாரும் உண்டு. அந்த ஐம்பதினாயிரவரில், அவனுடைய கண்ணுக்குக் கண்ணாக, கட்டிக் கரும்பாக, நகத்திற்குச் சதையாக, பூவுக்கு மணமாக, பத்தினிப் பெண்களிலே பதுமினப் பெண்ணாய், கண்ணால் பார்க்கவும், மயக்கம் போடும் மோகலாகிரி தரும் அஜமுகி என்பவள் ஆசைக்குகந்த பட்ட மகிஷி.

*****************************







A writer is someone who can make a riddle out of an answer.
**<< Karl Kraus**

How to teach people to do what hasn't been done is a great riddle.
**<< Peter Thiel**

All great characters, great icons, in literature are a bit of a riddle,
and that's the reason we go back to them over and over.
**<< David Lagercrantz**

The study of folklore is largely the study of particular folklore genres:
myth, folktale, legend, ballad, proverb, riddle, superstition, etc.
**<< Alan Dundes**

## *கடவுளும் கந்தசாமிப் பிள்ளையும்*

[கலைமகள், அக்டோபர்-நவம்பர்,1943]

"கண்டக்டர்தான் என்னை ஏமாற்று ஏமாற்று என்று வெற்றிலை வைத்து அழைக்கும்போது அவனை ஏமாற்றுவது, அதாவது அவனை ஏமாறாமல் ஏமாற்றுவது தர்ம விரோதம். நேற்று அவன் அப்படிக் கேட்டபடி ஸென்ட்ரலிலிருந்து மட்டும் கொடுத்திருந்தால் காப்பி சாப்பிட்டிருக்கலாம்.

. . . . . . . . .

வழி கேட்டவரைக் கந்தசாமிப் பிள்ளை கூர்ந்து கவனித்தார். வயசை நிர்ணயமாகச் சொல்ல முடியவில்லை. அறுபது இருக்கலாம். அறுபதினாயிரமும் இருக்கலாம். ஆனால் அத்தனை வருஷமும் சாப்பாட்டுக் கவலையே இல்லாமல் கொழு கொழு என்று வளர்ந்த மேனி வளப்பம்.

. . . . . . . . . . . .

"நம்முடைய லீலை" என்றார் கடவுள்.

"உம்முடைய லீலை இல்லைங்காணும், ஹோட்டல்காரன் லீலை. அவன் சிக்கரிப் பவுடரைப் போட்டு வைத்திருக்கிறான். உம்முடைய லீலை எல்லாம் பில் கொடுக்கிற படலத்திலே" என்று காதோடு காதாய்ச் சொன்னார் கந்தசாமிப் பிள்ளை. சூசகமாகப் பில் பிரச்னையைத் தீர்த்துவிட்டதாக ஓர் எக்களிப்பு.

. . . . . . . . . .

"கள்ள நோட்டு. என்னை ஏமாற்றப் பார்த்தார். நான் அவனை ஏமாற்றிவிட்டேன்" என்றார் கடவுள். அவருடைய சிரிப்பு பயமாக இருந்தது.

"என் கையில் கொடுத்தால், பாப்பான் குடுமியைப் பிடித்து மாற்றிக்கொண்டு வந்திருப்பேனே" என்றார் கந்தசாமிப் பிள்ளை.

"சிக்கரிப் பவுடருக்கு நீர் உடன்பட்டீரா இல்லையா? அந்த மாதிரி இதற்கு நான் உடன்பட்டேன் என்று வைத்துக்கொள்ளும். அவனுக்குப் பத்து ரூபாய்தான் பெரிசு. அதனால்தான் அவனை ஏமாற்றும்படி விட்டேன்" என்றார் கடவுள்.

. . . . . . . . . .. . . . .

".. . வியாதியும் கூடுமானவரையில் அகன்றுவிடக்கூடாது.ஆசாமியும் தீர்ந்துவிடக்கூடாது. அப்பொழுதுதான், சிகிச்சைக்கு வந்தவனிடம் வியாதியை ஒரு வியாபாரமாக வைத்து நடத்த முடியும். ஆள் அல்லது வியாதி என்று முரட்டுத்தனமாகச் சிகிச்சை பண்ணினால்,தொழில் நடக்காது. வியாதியும் வேகம் குறைந்து படிப்படியாகக் குணமாக வேண்டும். மருந்தும் வியாதிக்கோ மனுஷனுக்கோ கெடுதல் தந்துவிட்க் கூடாது. இதுதான் வியாபார முறை. . ."

. . . . . . . . . .

கடவுள் விஷயம் புரிந்தவர் போலத் தலையை ஆட்டினார்.

. . . .

இதுவரையில் பூலோகத்திலே வரம் வாங்கி உருப்பட்ட மனுஷன் யார் என்ற கேள்விக்குப் பதிலே கிடையாது என்றுதான் அவருக்குப்பட்டது.






If God had wanted me otherwise, He would have created me otherwise.
<< **Johann Wolfgang von Goethe**

Sir, my concern is not whether God is on our side;
my greatest concern is to be on God's side, for God is always right.
<< **Abraham Lincoln**

“Our prayers should be for blessings in general, for God knows best what is good for us.”
**<< Socrates**

“God gave you a gift of 86,400 seconds today. Have you used one to say ‘thank you?”
**<< William Arthur Ward**






Superstition is to religion what astrology is to astronomy
the mad daughter of a very wise mother.
**<< Voltaire**

I have never made but one prayer to God, a very short one:
'O Lord make my enemies ridiculous.' And God granted it.
<< **Voltaire**

India has two million gods, and worships them all.
In religion all other countries are paupers; India is the only millionaire.
**<< Mark Twain**

If people are good only because they fear punishment,
and hope for reward,
then we are a sorry lot indeed.
**<< Albert Einstein**

***சித்தி***

[கலைமகள், ஜனவரி,1944]

சம்சார பந்தத்தில் மனிதன் எப்படி நடந்து கொள்கிறான் என்பதைப் பூர்ணமாகத் தெரிந்துகொள்வதற்கு ஒருவருக்குத்தான் முடியும். அம்மி மிதித்து அருந்ததி பார்த்து ஊறறிய ஒரே தலையணையில் தலைசாய்க்கச் சம்மதித்துக் கொண்ட ஜீவனுக்குத்தான், அன்று தொடங்கிய ஒழுங்கு எந்தக் கதியில், எந்த நியதியில் செல்லுகிறது என்பதைப் பூரணமாகத் தெரிந்து கொள்ளச் சௌகரியம் உண்டு. விவேகிகள் தெரிந்து கொள்வார்கள். அந்த வசதி பெறாதவர்கள் தலையைத் தாங்கிய தலையணையைப்போல பாரத்தைத் தாங்கியதால் விழுந்த குழியைத்தான் மன உலகில் பெற்றிருக்க முடியும். மீனாட்சியம்மைக்கு, தன் கணவர், தன்னுடைய அந்த இளமையிலே, நிதானம் இழந்த தெப்பம் போல உணர்ச்சி சுழிப்பில் மிதந்த காலத்திலும், பிறகு குடும்பம், குடித்தனம் என்ற வேட்கையில் வேரூன்ற நினைத்து ஆவேசத்துடன் சம்பாத்தியத்தில் தம்மை மறந்து இறங்கிய காலத்திலும், ஊரின் நன்மை தின்மைகளிலும் வல்லடி வழக்குகளிலும் தர்மாவேசம் உந்தத் தம்மை மறந்து வேலை செய்த காலத்திலும், தாமரையிலையில் உருண்டு உருண்டு விளையாடும் தண்ணீர் போல இருந்து வருகிறார் என்பதைப் பூரணமாக அறிந்திருந்தாள். அவரது செயல் அவளுக்கு அதிசயமாகத் தெரியவில்லை.

. . . . . . .

கிழட்டுச்சாமி அதை எடுத்துக் கையில் கொடுத்தது. பிழைகள் மலிந்த திருவாசகப் பதிப்பு அது. அநாதியான சிவபிரான் மாதிரி முன்னும் பின்னும் அற்றிருந்தது.

*****************************




In family life, love is the oil that eases friction, the cement that binds closer together, and the music that brings harmony.
**<< Friedrich Nietzsche**

The family is one of nature's masterpieces.
**<< George Santayana**

A happy family is but an earlier heaven.
**<< George Bernard Shaw**

The family is the test of freedom; because the family is the only thing that the free man makes for himself and by himself.
**<< Gilbert K. Chesterton**

The only rock I know that stays steady, the only institution I know that works, is the family.
**<< Lee Iacocca**

## நிசமும் நினைப்பும்

[கலைமகள், ஏப்ரல்,1945]

அவனிடம் இருக்கிறதை வாங்கிக்கொண்டு கடைசிப் பஸ் புறப்படும்முன் புறப்பட்டுவிட வேண்டும் என்ற வைராக்கியத்துடன், மனசு தனது நாட்டத்தின் பலன் காயா பழமா என்பது பற்றி அலமந்தது.

.. . . . .. . . .. . . .

சிதம்பரலிங்கக் கையெழுத்துப் பிரதி, பிரசுராலய ஷேஷத்திராடனம் புரிந்து புண்ணியம் சம்பாதித்தது என்பதை அறியாததற்குக் காரணம் தொழிலில் அவர் புதிது என்பதுதான்.

. . . . . . . . .

அந்தச் சமயத்திலே மனசு எப்படி இருந்திருக்கும்! இந்தப் புஸ்தக வியாபாரமே கேப்மாறி ஜாதிக்குத் தான் சரி. . . . நீங்களும் வந்தியள் . . . . நானும் என்னமோ எக்குத் தப்பா . .. . .

இதுக்குத்தான் ஆத்ம சக்தின்னு பேரு. அறிஞ்சுதான் அஹிம்சையைப் பிடித்துக்கொண்டிருக்கிறார் மகாத்மா. எனக்கு நேத்தே இந்த மாதிரிதான் நடக்கும்னு தெரியும்.

*****************************




Journalism is literature in a hurry.
**<< Matthew Arnold**

The press, like fire, is an excellent servant, but a terrible master.
**<< James Fenimore Cooper**

In journalism, there has always been a tension between getting it first and getting it right.
**<< Ellen Goodman**

Get your facts first, and then you can distort them as much as you please.
**<< Mark Twain**

## *எப்போதும் முடிவிலே இன்பம்*

[கலைமகள், ஜுன்,1945]

அது மிகவும் ஆசாரமான முயல். நாலு வேதம், ஆறு சாஸ்திரம் மற்றும் தர்க்கம் வியாகரணம் எல்லாம் படித்திருந்தது. திரிகரண சுத்தியாகத் தெய்வத்தின் மீது பாரத்தைப் போட்டு, வாழ்வின் சுகங்கள் எல்லாம் ஒன்று பாக்கி விடாமல் அனுபவித்து வந்தது.

அந்த முயல் எலியட்ஸ் ரோடில் உள்ள ஒரு கலெக்டர் பங்களாவில் வசித்து வந்தது. வெகு காலமாகத் தான் வசிக்கும் இடம் ஒரு கலெக்டரின் பங்களா என்பது அதற்குத் தெரியாது. அதைத் தெரிந்து கொண்ட பிற்பாடு அதற்குப் பெருமை சொல்லி முடியாது.

. . . . . . . . . . . . . .

மறுநாள் அதிகாலையில் எழுந்து, முயல் காயத்திரி ஜபித்துக் கொண்டிருந்தது. சூரிய கிரணங்கள் மூடிய இமை வழியாக அதன் கண்ணுக்குள் இந்திர ஜாலங்களைக் காட்டிக் கொண்டிருந்தன. கீரைப் பச்சையும் டொமாட்டோச் சிவப்பும் அடிக்கடி தோன்றி, கலெக்டர் பங்களாக் காய்கறி தோட்டத்துக்கு அதன் மனசை இழுத்துச் சென்றன.

. . . . . . . .

முயல்கள் கண்ணுக்குத் தென்படாததைக் கண்டு கலெக்டர் அதிசயப்படவில்லை. தமக்கு எதிராகப் பெரிய சதி நடந்ததும் அவருக்குத் தெரியாது.

******************************

The smallest feline is a masterpiece.
<< **Leonardo da Vinci**

I am fond of pigs. Dogs look up to us. Cats look down on us. Pigs treat us as equals.
<< **Winston Churchill**

Pets are humanizing. They remind us we have an obligation and
responsibility to preserve and nurture and care for all life.
<< **James Cromwell**

Animals are such agreeable friends they ask no questions, they pass no criticisms.
**<< George Eliot**

A rabbit's foot may bring good luck to you, but it brought none to the rabbit.
**<< Ambrose Bierce**

If you chase two rabbits, you will not catch either one
**<< Russian**

A rabbit is never caught twice in the same place.
**<< American**

## அன்று இரவு

[கலைமகள், ஜனவரி-பிப்ரவரி,1946

நான்மாடக் கூடலில் அன்றிரவு மூவர் உறங்கவில்லை. அதில் ஒருவன் சொக்கேசன். மனிதனுடன் மனிதனாக நடமாடி, அவர்களுடைய சுக துக்கங்களில் பகிர்ந்து கொண்டு, வளையல் விற்று, சாட்சி சொல்லி, சங்கப் புலவர்கள் கருவமடக்கி, வாழையடி வாழையாக ஆண்டுவரும் பாண்டியர்களுக்கு மந்திரியாய், நல்லாசிரியனாய், தெய்வமாய்க் கை கொடுத்து வரும் சொக்கேசன், அழகன் உறங்கவில்லை. பிறவா நெறி காட்டுவானுக்கு உறக்கம் ஏது? ஊன் ஏது? அடுத்த ஆள் ஓர் அரசன், பாண்டியன், அரிமர்த்தன பாண்டியன், இமையா நாட்டம் பெற்றவன் போல, சயனக் கிருஹத்தில் மஞ்சத்தில் அமர்ந்து நினைவுக் கோவிலில் நடமாடி வந்தான்.

. . . . . . . . . . . . . . ..

அரசன் அரண்மனை வாசலில் வந்து நிற்கிறான். "குதிரை லாயத்தில் நரிகள் புகுந்து விட்டன. அரசே, அவை நகருக்குள்ளும் பிரவேசித்து விடும் போலத் தெரிகிறது" என்று கும்பிடுகிறார்கள் குதிரைப் பந்தியின் காவலர்கள்.

.. . . . . . . .

காலத்தின் மீது விழுந்தது. தர்மதேவனுடைய வாள்மீது விழுந்தது. சாவின் மீது, பிறப்பின் மீது, மாயையின் மீது, தோற்றத்தைக் கடந்தவனின் மீது, வாதவூரன் மீது, வாதவூரன் வேதனையின் மீது, அவன் வழிபட்ட ஆசையின் மீது, அவனது பக்தியின் மீது அந்த அடி விழுந்தது.

அங்கயற்கண்ணியின் மீது விழுந்தது. அவளது நெற்றித் திலகத்தின் மீது, கொங்கைக் குவட்டின் மீது அந்த அடி விழுந்தது.

******************************




"This is the gist of all worship: to be pure and to do good to others. He who sees Shiva in the poor, in the weak, and in the diseased, really worships Shiva. And if he sees Shiva only in the image, his worship is but preliminary. He who has served and helped one poor man seeing Shiva in him, without thinking of his caste or creed or race or anything, with him Shiva is more pleased than with the man who sees Him only in temples."

**<< Swami Vivekananda**

## *சிவசிதம்பர சேவுகம்*

[தமிழ்மணி (பொங்கல் மலர்),1944]

இவர்தான் சாமி சிவசிதம்பரம் பிள்ளை. லேயன்னா மேனா வீனா ஜவுளிக்கடையில் அவருக்கு சேவகம். பட்டணத்திலே அந்தக் காலத்தில் குண்டு விழுந்தபோது, முறிந்து மூடிய ஜவுளிக்கடை ஒன்றின் "ஸ்பிளின்டர்களாக" திருநெல்வேலி மேற்கு ரத வீதியில் வந்து விழுந்தார். அன்று விழுந்த இந்தச் சதைப் பிண்டம் இன்றும் நாடியின் தாள அமைதி குன்றாமல் அடித்துக் கொண்டிருக்கிறது. அவர் மாறியது கிடையாது, அவரது குடும்பமும் மாறியது கிடையாது, அவருடைய சேவகமும் மாறியது கிடையாது. அவர் வந்தபோது லேயன்னா இருந்தார்.

.. . . . . .. . . . . . . . . . .. . .. .

யாரையாவது கெடுப்பது என்றால் மண்ணை வாரிப்போடுவது என்பது, யாரையும் கெடுத்தல் என்பதுதான் தமிழில் வெகுஜன வாக்கு. வீரபாகு பிள்ளை ரோடின் தலையில் கப்பிக் கல்லையும் மண்ணையும் வாரி வாரிப் போட்டுக் கொண்டே அருந்தார். பிறகு அதில் மறுபடியும் ரிப்பேர் நடத்த லாயக்கான பஸ் செர்விஸ் நடத்தினார்.

. . . . . . . . . . . .. . . . .

ரொம்ப நாள் பழகினாலும் கடவுள் கூடப் புளித்துப் போவார் அல்லவா?

. . . . . . . . . . . . ..

கோவிலிலே வசனம் இருந்த மாதிரி சேவகம். முன்பு நர சேவகம். இப்பொழுது தெய்வ சேவகம். லோகத்திலும் அயோக்கியர்கள் நடமாடுகிறார்கள். தெய்வ சந்நிதானத்திலும் நடமாடுகிறார்கள். அங்கே வியாபாரார்த்தமாக மனசை அடமானம் வைக்கிறார்கள். இங்கே உலகத்தை உய்விக்கும் பரந்த நோக்கத்துடன் வியாபாரார்த்தமாக மனசை அடமானம் வைக்கிறார்கள். மானத்தை விற்கிரயம் பண்ணுகிறார்கள்.

*****************************




The price of success is hard work, dedication to the job at hand,
and the determination that whether we win or lose,
we have applied the best of ourselves to the task at hand.
**<< Vince Lombardi**

We all have dreams. But in order to make dreams come into reality,
it takes an awful lot of determination,
dedication, self-discipline, and effort.
**<< Jesse Owens**

## *நிர்விகற்ப சமாதி*

[நவசக்தி - ஆண்டுமலர், டிசம்பர்1944-ஜனவரி 1945]

தென்னாட்டில், திருச்செந்தூர் பிராமணர்கள் முன் குடுமி வைத்திருப்பார்கள். குயத் தொழிலில் ஈடுபட்டுள்ள வகுப்பினரும் முன் குடுமி வைத்திருப்பார்கள். இதனால்தான் இந்த ஏச்சு.

. . . . .. . . . . . . . .. . . . .

உலகநாத பிள்ளை இவ்வளவு செய்கிறாரே இத்தனை வருஷ காலங்களில் தமக்கு என்று சொந்தமாக ஒரு காலணா செலவழித்து கார்ட் எழுதியது கிடையாது. இப்போது முக்காலணா கார்ட் யுகத்தின் போது கடிதம் எழுதிவிடப் போகிறாரா?

. . . . . . . .. . . . . . .

மனுஷ வர்க்கம் முழுவதுமே தன்னைப் படைத்தவனுடைய தன்மையை ஸ்புடம் போட்டுப் பார்ப்பது போல தவறுக்கு மேல் தவறு செய்து கொண்டிருந்தும் அவர்களை பொருட்படுத்தாது நின்ற கடவுள், ஏதோ எப்போதோ ஒரு சங்கரர் சொன்னதை உலகநாத பிள்ளை வாஸ்தவமாக நம்புகிறாரா? இல்லையானால் சோதிக்கவா மூட்டை கட்டிக் கொண்டு வரப்போகிறார்?

. . . . . . . . . . . . . . . .

"சதி, சதி விடுங்க. குருக்களையாவாலே இவ்வளவும், எவனையா வேலே மெனக்கட்டு வேறொருத்தன் கடுதாசியைப் படிப்பான்" என்றார் சுப்பையா.

*****************************




"Postman's bag is always heavy because it carries the life itself:
It carries all the sorrows and all the joys, all the worries and all the hopes!"
<< **Mehmet Murat ildan**

I don't film messages. I let the post office take care of those.
**<< Bernardo Bertolucci**

One of the things the government can't do is run anything. The only things our government runs are the post office and the railroads, and both of them are bankrupt.
<< **Lee Iacocca**

நான் திடுக்கிட்டுத் திரும்பினேன். குரல் ஆணோ பெண்ணோ எனச் சந்தேகப்படும்படியாக இருந்தது. வாக்கு தமிழ்தான் என்றாலும் தொனிப்பு யாழ்ப்பாணத்துக்காரர் ரீதியில் இருந்தது. சுற்றுமுற்றும் பார்த்தேன். யாரும் தென்படவில்லை.

. . . . . . . . . . . . . . .

நான் அது சொல்லியபடியே செய்தேன். தளத்தின் ஒரு பகுதி விலகியது. படிக்கட்டுகள் தென்பட்டன.

"தைரியமாக உள்ளே போ. உனக்கு ஆபத்து எதுவும் ஏற்படாது" என்றது அந்தத்தலை.

. . . .. .. . . . . . . . . ..

"விணாகப் பொழுதைப் போக்கிக் கொண்டிருக்காதே. உன்னை ஸித்தலோகத்திற்கு அழைத்துச் செல்ல உத்தேசித்திருக்கிறேன். உனக்கு அங்கே சென்றால்தான் உணவு" என்றது அந்த உடம்பற்ற குரல்.

. . . . . . . . . . . . . . . . ..

"அப்படியானால் நான் முதலில் கோவிலுக்குள் நுழையும்போது அந்தக் கன்னியின் சிரசின் மூலம் தாங்கள்தான் பேசினீர்களோ?" என்று கேட்டேன்.

******************************




The important thing is not to stop questioning. Curiosity has its own reason for existence. One cannot help but be in awe when he contemplates the mysteries of eternity, of life, of the marvelous structure of reality. It is enough if one tries merely to comprehend a little of this mystery each day.
**<< Albert Einstein**

I don't have to know an answer. I don't feel frightened not knowing things, by being lost in a mysterious universe without any purpose, which is the way it really is as far as I can tell.
**<< Richard Feynman**

There is no mystery whatever
only inability to perceive the obvious.
**<< Wei Wu Wei**

Some mysteries are too pleasing to be questioned.
**<< James Alan Gardner**

***படபடப்பு***

[கவிக்குயில்: முதல் மலர்,1946]

பட்டணத்து வாசிகள் திடீரென்று ராணுவ நிபுணர்களாக, வேவல்களாகவும், ஆக்கின்லெக்குகளாகவும் மாறினார்கள். ரயில்வே ஸ்டேஷன்களில் கூட்டம் இமைக்க முடியாததாயிற்று. மோக்ஷவாசல் ஊசியின் காதைப் போல அவ்வளவு சிறியது என்று கிருஸ்து மகான் சொன்னார். பட்டணத்து வாசல்களான ஸ்டேஷன்கள் பட்டணவாசிகளுக்கு மோக்ஷவாசல்களாக மாறியது.

. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .

"நான் பார்த்தேன்" என்றது குரல்.

"அதற்குப் பிறகுதான் சங்கு ஊதினான்" என்று குறைபட்டுக் கொண்டது மற்றொரு குரல்.

. . . . . . . . ..

நான் விழித்துப் பார்க்கும்போது விடிந்து வெகு நேரமாகிவிட்டது. அபாய நீக்கச் சங்கு எப்போது ஊதினார்களோ தெரியாது.

வெளிக்குரல்கள் கேட்டன. அதிலே பழைய உயிர்ப்பற்ற படபடப்பு தொனித்தது.

*****************************




Railway termini are our gates to the glorious and the unknown.
Through them we pass out into adventure and sunshine, to them, alas! we return.
**<< EM Forster**

The only way to be sure of catching a train is to miss the one before it.
**<< Gilbert K. Chesterton**

If your train's on the wrong track every station you come to is the wrong station.
**<< Bernard Malamud**

If a train doesn't stop at your station, then it's not your train.

**<< Marianne Williamson**

## அவதாரம்

[முல்லை, தை,1947]

கிருஷ்ணக் கோனார் என்ற கிருஷ்ணசாமிதாஸ் யாதாவர்களுக்குள் யோக்கியர் என்ற பெயர் வாங்கியவர். யோக்கியர் என்றால் அயோக்கித் தன்மையில் இறங்காதவர் என்றே அர்த்தம். சந்தர்ப்ப வசதி இல்லாததினாலோ என்னவோ நல்லவராகவே பெயரெடுத்து வந்திருக்கிறார்.

. . . . . . . . . . . . .

எம்மதத்தவரானாலும் துறவிகளாக வருகிறவர்களுக்கு நம்மவர் செலுத்தும் மரியாதை சிற்சில இடங்களில் தவறான மதிப்பும் அந்தஸ்தும் கொடுத்து விடுகிறது. இத்துடன் ஓரளவு தர்மச் செலவு செய்யும் சேவையும் சேர்ந்து கொண்டால் அந்தஸ்து வளர்ச்சிக்கு அளவே கிடையாது.

'.. . . . . . . . . . . . . . . .'.

ஒரு லட்சியமோ, கொள்கையோ இல்லாதவர்களும், அல்லது லட்சியத்திலோ கொள்கையிலோ நம்பிக்கையில்லாதவர்களும் பிரம்மச்சரிய விரதத்தை அனுஷ்டிக்க முயலுவதும், அனுஷ்டிக்கும்படி கட்டாயப்படுத்துவதும் ரொம்ப அபாயகரமான விஷயம். தீயுடன் விளையாடுவதாகும்.

. . . . . . . . . . . . . . . . . . . . . .. . . . ' . .. '

லெட்சுமி என்ற பெண் இசக்கிமுத்துக்கு உடலதிர்ச்சிகளில் இருக்கும் இன்பத்தைக் காட்ட அவ்வூர்ப்பெரியோர்களால் ஆசிர்வதிக்கப்பட்டாள்.

*****************************




No legacy is so rich as honesty.
**<< William Shakespeare**

No matter what you do, stand up for who you are and be honest.
**<< Bryant McGill**

Honesty has a power that very few people can handle.
**<< Steven Aitchison**

People all over the nation are starved for honesty and common sense.
**<< Ben Carson**

The first step is to be honest, and then to be noble.
**<< Winston Churchill**

## கயிற்றரவு

[காதம்பரி,, ஏப்ரல்,1948]

"கள்ளிப் பட்டியானால் என்ன? நாகரிக விலாசமிகுந்தோங்கும் கைலாசபுரம் ஆனால் என்ன? கங்கையின் வெள்ளம் போல, காலம் என்ற ஜீவநதி இடைவிடாமல் ஓடிக் கொண்டிருக்கிறது. . . . ஓடிக் கொண்டே இருக்கும்.

. . . . . . . . .  . . .  . . . . .

"கைலாசபுரத்து ஆற்றங்கரை பனை மூட்டடியிலே உட்கார்ந்த பரமசிவம் பிள்ளையின் மனம் "தான்" இல்லாத ஒரு காலத்தைச் சற்று சிரமத்துடன் கற்பனை பண்ணத் தொடங்கியது.

. . . . . . . . . . . . . .

நான் ஓடினால் காலம் ஓடும். நான் அற்றால் காலம் அற்றுப் போகும். காலம் ஓடுகிறதா? ஞாயிறு - திங்கள் - செவ்வாய் - நான் இருக்கும் வரைதான் காலமும். அது அற்றுப் போனால் காலமும் அற்றுப் போகும். வெறும் கயிற்றரவு!

பரமசிவம் பிள்ளை எங்கே?

*****************************




Beauty is the only thing that time cannot harm. Philosophies fall away like sand, creeds follow one another, but what is beautiful is a joy for all seasons, a possession for all eternity.
<< **Oscar Wilde**

I have just got a new theory of eternity.
<< **Albert Einstein**

Death is a commingling of eternity with time; in the death of a good man, eternity is seen looking through time.
<< **Johann Wolfgang von Goethe**

All great natures delight in stability; all great people find eternity affirmed in the very promise of their faculties.
**<< Ralph Waldo Emerson**

Millions of persons long for immortality who do not know what to do with themselves on a rainy afternoon.
**<< Susan Ertz**

All that is not eternal is eternally out of date.
**<< CS Lewis**

## என் கதைகளும் நானும்

புதுமைப்பித்தன்

~~~~~~~~~~~~~~~~~~~~~~

"தன்பலம் தனக்குத் தெரியாது" என்பது வெகுஜன வாக்கு. அதே மாதிரி தன் பலவீனமும் விசத்திரபேதங்களும் பிறர் கண்ணுக்குத் தெரிவதுபோல தனக்குத் தெரியாதென்பதையும் வெகுஜனவாக்காகக் கொள்ள வேண்டும். ஏனென்றால், முந்திய வசனத்தின் உட்கிடை பிந்திய வியாக்கியானம். நல்லதும் சோடையுமாகச் சுமார் இருநூறு கதைகள் எழுதிவிட்டு, அப்புறம் அவற்றின் தராதரத்தைப்பற்றிக் கவனிப்பது எழுதினவருக்கு ஒரு ரசமான பொழுதுபோக்கு. என்னுடைய கதைகளைப் பொறுத்தவரை அமிர்தமான பாராட்டும் பரவசமும் ஒரு சார். மற்றொரு புறம் பலத்த மனப்பூர்வமான கண்டனம். இந்த இரண்டும் என்னுடைய கதைகள் பெற்றுள்ள கவர்ச்சிகள். ஒரு பரம ரசிகர் என்னுடைய கதைப் புஸ்தகத்தைக் கண்டவுடன் "இந்த மனிதன் எப்பொழுது கதை எழுதுகிறதை நிறுத்திக்கொள்வான்" என்று ஆவலுடன் கேட்டார். அந்தப் பரம ரசிகருக்குத் தான் என்னுடைய அடுத்த புஸ்தகத்தை அவருடைய கொய்னா மாத்திரையை சமர்ப்பிக்கப் போகிறேன். மற்றொரு கலை நுணுக்கவாதி, "இவர் என்ன சூனாமானவரா?"என்று கேட்டார். என் கட்சி பேச ஆசைப்பட்ட ஒருவர் "அவரும் நம்மைப்போல் ஒரு மனிதர் தான்" என்று தெளிவுபடுத்திக் கொடுத்தார். இதே மாதிரிதான் பரவசமும் பாராட்டுதலும். அவையும் தன்னை மறந்த "சாமியாட்ட"மாக இருக்கிறது.

என் கதையில் உள்ள கவர்ச்சிக்கு ஓரளவு காரணம் நான் புனைந்து கொண்ட புனைபெயராகும். அது அமெரிக்க விளம்பரத்தன்மை வாய்ந்திருக்கிறது என்பதை இப்போது அறிகிறேன். பிறகு நான் எடுத்தாளும் விவகாரங்கள். பலர் வெறுப்பது. சிலர் விரும்புவது, நிற்கட்டும்.

என்னுடைய கதைகளை நான் எப்படி எழுதுகிறேன்? மற்ற எல்லோரையும் போலத்தான் பேனாவும் பென்சிலும் உபயோகித்து எழுதுகிறேன். வாரத்துக்கு ஐந்து ஆறு கதைகளிலிருந்து வருஷத்துக்கு ஒன்று என்ற திருமூலர் அந்தஸ்தை எட்டியிருக்கிறேன். பரிணாம நியதிப்படி வளர்ச்சிதான். இனிமேலும் இந்த நியதிப்படியே பிறக்க ஆரம்பித்தால் பொருளாதார வகையில் எனக்கு நஷ்டக் கணக்குதான்.

என் கதைகளில் எது நல்ல கதை? எனக்குத் தெரியவில்லை. ஒவ்வொன்றும் நல்ல கதையாகத்தான் இருக்கிறது. இப்பொழுது படித்துப் பார்க்கும் போதும் எனக்குப்படிக்க பரம
~~~~~~~~~~~~~~~~~~~~~~

சுகமாக இருக்கிறது. எல்லோரும் "சில்பியின் நரகம்" நல்ல கதை என்கிறார்கள். அது "மணிக்கொடி" நடக்கும்போது அந்தக்காரியாலயத்தில் சாயங்காலம் சிக்கிக்கொண்டு விளாசிக் கிறுக்கி விட்டு, வீட்டுக்குத் தப்பி வந்த கதை. "நினைவுப் பாதை" நல்ல கதை என்று சொன்னார்கள். தினமணிவருஷ மலரில்தான் அந்தக்கதை முதன் முதலில் வெளியாயிற்று. அப்போது வருஷ மலரைப் பதிப்பிக்கும் பொறுப்பு என்வசம் அளிக்கப்பட்டிருந்தது. ஒருநாள் ராத்திரி எட்டுப் பக்கங்களுக்கு என்று விஷயங்களை எழுதிக் கொடுத்துவிட்டு, "புரூப்" வரும் என்று எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். ராத்திரி பதினொரு மணியிருக்கும் அப்பொழுது அச்சு இலாகா "போர்மன்" என்னிடம் வந்து, "ஸார், இரண்டு பக்கங்களுக்கு விஷயம் தேவை" என்றார். படம் செய்து கொடுப்பவர் குறித்த காலத்தில் "பிளாக்"குகளை அனுப்பாததனால் அந்தச் சங்கடம். அந்தப் பக்கங்களில் வரவேண்டிய கட்டுரைகளை மாற்றிவிட்டு, வேறு கட்டுரைகளைக் கொடுத்தேன். அது இரண்டு பக்கங்களில் வந்து உதைத்துக் கொண்டது. வேறு ஏதோ கதை ஒன்று எழுதி அதற்காகச் செய்து வைத்த பிளாக்குகளை உபயோகித்து, இரண்டு பக்கங்களுக்கு என்று ஒரு கதை எழுதி, பக்கத்தை நிரப்பினேன் என்று சொல்வது பிசகு, "ரொப்பினேன்"என்று கிராம்யமாகச் சொன்னால்தான் பொருந்தும்.

நான் தினசரி பத்திரிகையில் போய் உதவி ஆசிரியனாக அமர்ந்திருந்தேன். இந்த ஆசிரியர் வீணாகப் பொருள் விரயம் செய்பவரல்ல. ஒருநாள் என்னிடம் வந்து ஒரு பிளாக்கைக் கொடுத்து, "இந்தப் படத்துக்காக வைத்திருந்த கதை கைதவறி விட்டது. நீங்கள் இதற்குப் பொருந்துவது போல் ஒரு கதை எழுதுங்கள்" என்றார். உருவப்படத்தை எழுதி வைத்துக் கொண்டு, அதை முகஜாடை உள்ளவர் ஒருவரைத் தேடி அவரிடம் அதை விற்பது போல, நானும் ஒரு கதை எழுதிக் கொடுத்தேன். அதுதான் கோபாலபுரம். இன்னும் அதை வாசிக்கும்போது எனக்கு நன்றாக இருப்பது போலத்தான் தெரிகிறது.

இந்தக்கதை எழுதுகிறதிலேயே வேடிக்கையான அனுபவம் எனக்குத் தான் ஏற்பட்டிருக்கிறது என்று சொல்ல வேண்டும். கதை தருவதாக வாக்குக் கொடுத்து சொல்ல வேண்டும். கதை தருவதாக வாக்குக் கொடுத்து விட்டு, கடைசி நிமிஷம் வரை போக்குக் காட்டி, சாத்தியமானால், அந்தக் குறிப்பிட்ட இதழுக்குத் தப்பி விடுவதில் நான் கைதேர்ந்த நிபுணன். இது என்னுடைய நண்பர்களான பத்திரிகை நிர்வாகிகளுக்கு நன்றாகத் தெரியும். ஸ்டே-இன்-ஸ்ட்ரைக் போல, பக்கத்தில் ஆளை உட்கார்த்தி வாங்கிக்கொண்டு போய்விடுவார்கள். இது வழக்கப்படி அவர்கள் அனுஷ்டிக்கும் முறை. ஒருமுறை, "அடுத்த இதழுக்கு என்ன கதை?" என்று கேட்டார்கள். "சரி தருகிறேன்" என்றேன். ஒருநாள் திடீரென்று வந்து, "அடுத்த இதழுக்கு முன் விளம்பரம் கொடுக்கப் போகிறேன். கதையைக் கொடுங்கள்" என்று கெடுபிடி செய்துவிட்டார்கள். "ரொம்ப நீளமான கதை. பாதிதான்

எழுதியிருக்கிறேன், பூர்த்தி செய்து கொடுக்கிறேன்'' என்று சொன்னேன். அப்பொழுது, ''கதையின் பெயரையாவது சொல்லுங்கள்'' என்றார்கள்.

அப்பொழுது மத்திய அசெம்பிளித் தேர்தல் போலிருக்கிறது. காங்கிரஸ் போட்டியிடும் காலம். ஸ்ரீசங்கு சுப்பிரமணியன் ''தினமணியில்'' எங்களுடன் சக ஆசிரியராக, தந்தி மொழிபெயர்த்துக் கொண்டிருந்தார். அவர் தேர்தல் பாட்டு ஒன்று எழுதி அன்றைத் தினமணியில் பிரசுரமாகி இருந்தது. ''நாட்டினுட நலம் கெடுக்கும் நாசகாரக் கும்பல்'' என்பது அந்தப் பாட்டில் ஒருவரி. ''நாசகாரக் கும்பல்'' என்ற வார்த்தைச் சேர்க்கை எனக்குப் பிடித்திருந்தது. அடிக்கடி என் வாய் அதை அலப்பிக் கொண்டிருந்தது. கதையின் பெயர் கேட்ட நண்பர்களிடம், ''நாசக்காரர் கும்பல்'' என்று சொல்லிவிட்டேன். நான் சொல்லப்போகும் அந்த நாகச்கார கும்பல் யார் என்று எனக்குத் தெரியாது. முப்பத்து முக்கோடி தேவர்களா அல்லது அதற்கும் சிறிது எண்ணிக்கை குறைவான தேவதைகளா, அல்லது 1935ஆம் வருஷ இந்திய சர்க்கார் சட்டப்படிநடக்கும் பிரிட்டிஷ் ஆளுகைக்கு உட்பட்டவர்களா என்பது எனக்குத் தெரியாது. ஏதோ சொல்லிவிட்டேன். பிறகு என் வழக்கப்படி விவகாரத்தை அடியோடு மறந்துவிட்டேன். பத்திரிகைக்கு கதை கொடுக்க வேண்டிய நாள் நெருங்க, நெருங்கமனசு ''கெதக், கெதக்''என்று அடித்துக் கொள்ள ஆரம்பித்தது. வாக்குறுதியை நிறைவேற்றாத கடைசிக் கெடுவும் வந்தது. நண்பர்கள் வந்து உட்கார்ந்து விட்டார்கள். நானும் பேனாவைக் எடுத்துக் கொண்டு ஓட்டினேன். எழுத்து பக்கம் பக்கமாகக் குவிந்து கொண்டு செல்கிறது. வசமான பிடிப்பு கைக்குள் சிக்கவில்லை. அவர்களும் பொறுத்துப் பொறுத்துப் பார்த்து விட்டு, ''மீதியை நாளைக்கு முடித்து அனுப்புங்கள்'' என்று கைவசமிருந்த கடுதாசிகளையும் எடுத்துக்கொண்டு போய்விட்டார்கள். அந்தச் சமயம் தப்பித்துக் கொண்டோம் என்ற பிரக்ஞை சற்றும் இல்லை. மறுநாள் எப்படியோ அதை முடித்துக் கொடுத்தேன். கதையும் வெளி வந்தது.

அச்சுப்பிழை பார்க்கிறவர்களை ஒதுக்கிவிட்டால் என் கதையின் முதல் வாசகன் நான்தான். அவ்வளவு ரசித்துப் படிப்பேன். வேகமாக எழுதிக்கொண்டு போவதால், எழுதியதில் அங்கொன்றும் இங்கொன்றும் தான் என் ஞாபகத்தில் இருக்கும். கோவையாக எழுத்து ரூபத்தில் என் கதைகளை நான் அச்சில்தான் பார்த்து வருகிறேன். அந்தப்படி படித்து வரும்போது முதலில், ''இலங்கையிலிருந்து திரும்பிய மருத்துவனாருக்கு மனைவி காலமாகிவிட்டார்'' என்று இரண்டாம் பக்கத்தில் எழுதிவிட்டு, முடிப்பதற்கு முன் பக்கத்தில் ''மருத்துவனார் தன் மனைவியின் கைத்தாங்கலில் தள்ளாடி வந்த''தாக எழுதியிருந்தேன். இந்த மாதிரி மாண்டவர் மீண்ட விந்தை, துப்பறியும் திறமை காட்டாத இந்தக் கதையில் வந்திருப்பதைப் பத்திரிகை ஆசிரியருக்காக அறிவித்தேன். நான் எடுத்துக்காட்டிய பிறகு இனிமேல் செத்தவர்களை இந்த ரீதியில் உயிர்ப்பிப்பதில்லை என்று நானும் அந்த ஆசிரியரும்

சேர்ந்து வாசகர்களுக்கு உத்தரவாதம் அளித்தோம் என்று வையுங்கள். அந்தக் கதையை சமீபத்தில் ஒருமுறை படிக்க நேர்ந்தது. நன்றாகத்தான் இருக்கிறது.

நான் கதை எழுதுகிற சீர்சிறப்பு எல்லாம் இந்தமாதிரி தான் என்று வைத்துக் கொள்ள வேண்டாம். அதாவது நான் எழுத வேண்டியதுதான் பாக்கி. அது நேராகப் பத்திரிகையின் பக்கங்களில் போய் உட்கார்ந்து கொள்வது நிச்சயம் என்று கருத வேண்டாம். அப்படி ஒன்றும் இல்லை. ஒரு காலத்தில் என் கதைகளைப் போல பத்திரிகையில் நுழைய அனுமதி மறுக்கப்பட்டவை வேறு இருக்க முடியாது. நான் இப்பொழுது பிரசுரித்துள்ளவற்றின் அளவுக்கு ஏறக்குறைய சமமான எண்ணிக்கையுள்ள கதைகள், அவை எழுதப்பட்ட காலத்திலிருந்த பத்திரிக்கைக் காரியாலயங்கள் எல்லாவற்றையும் சேஷத்திர தரிசனம் செய்துவிட்டுத் திரும்பியவையாகும். பிரசுரிக்கும் நோக்கமே இல்லாமல் நான் எழுதிக் கிழித்துப்போட்ட கதைகள் எத்தனையோ? எழுத்துக்குக் கைப்பழக்கம் மிகவும் அவசியம். முடுக்கிவிட்ட யந்திரம் மாதிரி தானே ஓர் இடத்தில் வந்து நிற்கும். இது என் அனுபவம். இதுவரை நான் கையாண்டு வரும் இந்த முறை பிசகியதே இல்லை. என் கதைகளிலே ஏற்றத்தாழ்வு உண்டு. அவற்றிற்குக் காரணம் வார்ப்புப் பிசகு அல்ல. கதை எழுதத் தூண்டிய மன அவசத்தின் உத்வேகத்தைப் பொறுத்தது. கதையின் கவர்ச்சியில் காணும் ஏற்றத்தாழ்வு.

நான் கதை எழுதுவதற்காக நிஷ்டையில் உட்கார்ந்து யோசித்து எழுதும் வழக்கம் இல்லை. இதை நான் ஸ்பஷ்டமாகச் சொல்ல வேண்டியதில்லை. நான் முன் விவரித்த உதாரணங்களே போதும். என் கதைகளில் நூற்றுக்குத் தொண்ணூறு எடுத்த எடுப்பில் எழுதியும் வெற்றி காணுவதற்குக் காரணம் என் நெஞ்சில் எழுதாக் கதைகளாகப் பல எப்பொழுதும் கிடந்துகொண்டே இருக்கும். அந்தக் கிடங்கிலிருந்து நான் எப்பொழுதும் எடுத்துக்கொள்வேன். கதை எழுதும் சிலர் இவற்றை விவரப் பட்டியல் எழுதி ஒரு மூலையில் போட்டு வைப்பார்கள். நான் அப்படியல்ல. ஞாபக மறதிக்கு அரிய வசதி அளிப்பேன். அதையும் தப்பி வந்தவைதாம் "புதுமைப்பித்தன் கதைகள்" என்ற கோவையும் பிறவும். ஆனால் ஒன்று. எழுத்து ரூபத்தில் அமையும் வரை மனசில் உறுத்திக் கொண்டு கிடக்கும் நிலையில் இந்தக் கதைகள் யாவும் இவற்றைவிடச் சிறந்த ரூபத்தில் இருந்தன என்பது என் நம்பிக்கை. எழுதி முடித்தபிறகு அவை சற்று ஏமாற்றத்தையே அளித்துவந்திருக்கின்றன. ஆனால் ஏமாற்றம் வெகு நேரம் நீடிப்பதில்லை.

என் கதைகளில் எதையாவது ஒன்றைக் குறிப்பிட்டு அது பிறந்த விதத்தைச் சொல்வதென்றால் ரிஷிமூலம் நதிமூலம் காணுகிற மாதிரிதான். சில ஆபாசவேட்கையில் பிறந்திருக்கலாம். சில குரோத புத்தியின் விளைவாகப் பிறந்திருக்கலாம். வேறு சில சுமக்கும் பொருளுக்குச் சற்றும் சம்பந்தமே இல்லாத ஒரு காரியம் கைகூடாத போது எழுதப்பட்டிருக்கலாம். இதனால், சுயமாகக் கற்பனை பண்ணிக் கொண்டிருக்கிறவனுக்கு

இன்னதுதான் இந்தக் கதையை எழுதத் தூண்டியது என்று சொல்வது எளிதல்ல. கேட்டால், ''என்னவோ தோணித்து, எழுதினேன்'' என்றுதான் சொல்ல வேண்டும்.

என் கதைகளின் தராதரத்தைப் பற்றி ''எரிந்த கட்சி'' ''எரியாத கட்சி'' ஆடுகிறார்கள். அதற்குக் காரணம், பலர் இலக்கியத்தில் இன்னதுதான் சொல்ல வேண்டும். இன்னது சொல்லக்கூடாது என ஒரு தத்துவம் இருப்பதாகவும் அதை ஆதரித்துப் பேசுவதாகவும் மனப்பால் குடித்துக் கொண்டிருக்கலாம். உண்மை அதுவல்ல. சுமார் இருநூறு வருஷங்களாக ஒருவிதமான சீலைப் பேன் வாழ்வு நடத்திவிட்டோம். சில விஷயங்களை நேர்நோக்கிப் பார்க்கவும் கூசுகிறோம். அதனால்தான் இப்படிச் சக்கர வட்டமாகச் சுற்றி வளைத்துச் சப்பைக் கட்டு கட்டுகிறோம். குரூரமே அவதாரமான ராவணனையும் ரத்தக் களறியையும் மனக் குரூபங்களையும் விகற்பங்களையும் உண்டாக்க இடமிருக்குமேயானால், ஏழை விபச்சாரியின் ஜீவனோபாயத்தை வர்ணிப்பதாலா சமூகத்தின் தெம்பு இற்றுப்போகப் போகிறது? இற்றுப் போனது எப்படிப் பார்த்தாலும் நிற்கப்போகிறதா? மேலும், இலக்கியம் என்பது மன அவசத்தின் எழுச்சி தானே. நாலு திசையிலும் ஸ்டோர் குமாஸ்தா ராமன், ஸினிமா நடிகை சீதம்மாள், பேரம் பேசும் பிரமநாயகம்-இத்தியாதி நபர்களை நாள் தவறாமல் பார்த்துக் கொண்டிருந்துவிட்டு, இவர்களது வாழ்வுக்கு இடமளிக்காமல், காதல் கத்தரிக்காய் பண்ணிக் கொண்டிருப்பது போன்ற அனுபவத்துக்கு நேர்முரணான விவகாரம் வேறு ஒன்றுமில்லை. நடைமுறை விவகாரங்களைப் பற்றி எழுதுவதில் கௌரவக் குறைச்சல் எதுவும் இல்லை.

நீளமாகத் தலை கத்தரித்து விட்டுக்கொண்டு, அடையாறு ஜிப்பா போட்டுக்கொண்டு, பங்கியடித்த மாதிரி கண்களை ஏறச்சொருக வைத்துக்கொண்டிருக்கும் படங்கள், அவை போன்ற கதைகள், நாசூக்கான கட்டம் வரை அதாவது உடை குலையாத கட்டம் வரை எழுதிக் கொண்டிருப்பதே கலையல்ல. அவைகளே, ''அப்புறம்'' என்ற நினைப்பைத் தட்டிவிட்டு ஆபாச வேட்கைகளைக் கிளப்புகின்றன. இலக்கியத்தில் கலையம்சம் என்பது ஜீவத் துடிதுடிப்பில்தான் இருக்கிறது. ராமாயணத்தில் விபசாரம் இல்லையா? தற்காலப் புஸ்தகத் தணிக்கை போர்டார், இப்பொழுது எழுதினால் ''ஆபாசம்'' என்ற தலைப்பில் கூட தடை விதிக்கக்கூடிய வேறு விவகாரங்கள் இல்லையா? ஒரு பெரிய மாளிகை மாதிரி ராமாயணம் அகண்டாகாரமாக இருப்பதால், அவை பலர் கண்களுக்குத் தென்படுவதில்லை. கோவில் கோபரச் சிற்பங்கள் போல என் கதைகள் அப்படிப் பட்டவையென்று நாமகரணம் சூட்டப்பட்டிருப்பதாக நான் தாக்குப்பிடித்துப் பேசவில்லை. என்னுடைய கதைகளில் அப்படிப்பட்டவை விலக்கு அல்ல என்று கூறுதல் பொருந்தும். ஏனென்றால் என் கதைகளில் ஒவ்வொன்றும், ஒரு விவகாரத்தைப் பற்றியதாக இருக்கும். ஆனால் என் கதைகளில் பொதுத்தன்மை நம்பிக்கை வறட்சி. ''எதிர்மறையான குணங்கள் இலக்கியத்துக்கு

வலுக்கொடுக்குமா?" என்று கேட்கலாம். அது ஏற்பவர்களின் மனப்பக்குவத்தைப் பொறுத்ததே ஒழிய, எதிர்மறை பாவத்தின் விஷயத் தன்மையைப் பற்றியதல்ல.

ஒருவர் என்னுடைய புனைபெயரை வைத்துக் கொண்டு என்னை விமர்சனம் செய்தார். "பித்தமும் இடையிடையே புதுமையும் காணப்படும்" என்றார். வாஸ்தவம்தான். "பித்தா பிறைசூடி பெருமானே" என்ற உருவகத்தில் பொதிந்துள்ள உன்மத்த விகற்பங்களை அவர் குறிப்பிடுகிறார் என்று பொருள் கொண்டு, அவ்வளவும் நமக்கு உண்டு என ஒப்புக் கொள்கிறேன். அவரவர் மனசுக்கு உகந்த ரீதியில் இருப்பவைகளே புதுமை எனக் கொள்ளப்படுகின்றன. நான் பொருள் கொடுக்கும் பித்தம்தான் அதில் புதுமை. என் கதைகளின் புதுமை அதுதான்.

*****************

## சிறுகதை: மறுமலர்ச்சிக் காலம்

புதுமைப்பித்தன்

~~~~~~~~~~~~~~~~~~~~~~~~

சமீபத்தில் என்னுடைய நண்பர் ஒருவர் ரசமான சம்பவம் ஒன்றைச் சொன்னார். அது நம்மவரிடைக் கதையை பற்றி எவ்விதமான அபிப்பிராயம் இருக்கிறது என்பதைக் காட்டுவதுடன், கதையின் தத்துவத்தையே விளக்குகிறது. என்னுடைய நண்பரின் நண்பர் இலக்கிய ரசிகர். பாவம், பண்பாடு, மரபு முதலிய சொல்லடுக்குகளைக் கொண்டு அம்மானையாடுபவர். "நாங்கள் வெளியிட இருக்கும் விசேஷ மலருக்கு ஒரு அரிய கட்டுரையாவது அனுப்பித் தரவேண்டும் எனக் கோருகிறோம்" என அவருக்கு வந்திருந்த கடுதாசியைக் காண்பித்து, "கட்டுரை எழுதுவதென்றால் சிந்திப்பதற்கு அவகாசமே இல்லை, ஒரு கதையாவது எழுதியனுப்பி விடலாமா என்று நினைக்கிறேன்" எனத் தமது சங்கடத்தை என்னுடைய நண்பரிடம் பகிர்ந்து கொண்டார். எனது நண்பரும் சிரித்துக்கொண்டே "அப்படியானால் இராத்திரியே ஒன்றை எழுதி நாளைத் தபாலில் அனுப்பி விடுங்கள்" என்று யோசனை சொல்லிவிட்டுப் போனார். மறுநாள் காலையிலும் அந்த நண்பருக்கு "என்ன சார், கதை எழுதி அனுப்பிவிட்டீர்களா?" என்று மரியாதையாகக் கேட்டார். அந்த ரசிகர் பொதுவாக நல்ல மனுஷர். மனசில் உள்ளதை ஒளிக்கமாட்டார். "ஒட்டிப் புளுகுவதற்கு எவனுக்கு வருறது சார்?" நேற்று ராத்திரி "ராமசாமி எழுந்து நின்று அந்தச் சன்னலையே பார்த்துக் கொண்டிருந்தான்" என்று முதல் வாக்கியத்தை எழுதினேன், ராத்திரி இரண்டு மணியடிக்கிற வரைக்கும் ராமசாமி சன்னலையேதான் பார்த்துக் கொண்டிருந்தான். இன்னும் அப்படித்தான் திண்டாடிக் கொண்டிருக்கிறான். மேலே கதை ஓடவில்லை" என்று சொன்னார்.

இந்தச் சம்பவத்தில் ஒரு ரசமான ஆழந்த உண்மையிருக்கிறது. கதை நன்றாக, வாய்ப்பாக, கவர்ச்சியாக அமைந்திருந்தால், நம்மாலும் எழுத முடியாதா என்ற மயக்க உணர்ச்சி தோன்றும்படி அவ்வளவு சுளுவாகத் தென்படும். தரை தெரியும்படியாக அவ்வளவு சுத்தமாக இருந்தால் ஆழம் புலப்படாதல்லவா? அது மாதிரிதான் இந்தக் கலை விவகாரம் எல்லாம். "பெண்ணிலா ஊரில் பிறந்தாரைப் போல வரும் வெண்ணிலாவே இந்த வேக முனக்காகாதே", "விதியே கொடியாய் விளையாடுதியோ?" என்று வரும் அடிகளில் லகுவாக
~~~~~~~~~~~~~~~~~~~~~~~~

அமைந்திருக்கும் இயல்பு நம்மையும் பாட்டெழுத வைத்து, கேலிக்கு இடமாக்குகிறதல்லவா? இதுதான் கலையின் இயல்பு. வலிந்து கட்டிப் பேசுவது மாதிரி இருக்காது. சொல்லப்படும் விஷயம் எதுவாக இருந்தாலும், நம்மை அதில் ஒன்ற வைப்பதுடன், நாமும் செய்திருக்கலாமே என்ற மயக்கவுணர்ச்சியை ஏற்படுத்துகிறது. பயன் கருதாது, தன்மயமாகி, லயித்து, ஒட்டிப்புளுகுவது தான் கதை.

இந்தக் கதை விவகாரத்திலே, சமீபகாலமாக சிறுகதை என்ற சொல்லாட்சி ஒன்று அடிபட்டு வருகிறது. அந்தப் பதச்சேர்க்கையே நமக்குப் புதிது. விக்கிரமாதித்தனின் அறுபத்து நாலு பதுமைகள் சொல்லிய சின்னக் கதைகளும், கதைகள்தான். ராமாயணமும் கதைதான். சிறுகதை என்பது நம்மைப் பொறுத்தவரை அளவைத்தான் குறிப்பிட்டுக்காட்டி வந்தது. இப்பொழுது கொடுக்கும் விசேஷ அர்த்தத்தை அல்ல. இந்தப் பதச் சேர்க்கை வெளிநாட்டுச் சரக்கு. நமக்கு இந்தப் பதம் இங்கிலீஷில் short story என்ற பதத்திற்கு வார்த்தைக்கு வார்த்தை மொழிபெயர்ப்புத்தான் சிறுகதை என்ற வார்த்தையும். இங்கிலீஷிலும் அந்தப் பதச்சேர்க்கை சமீபகாலமாக விவகாரந்தான். அளவைப் பிரதானமாகக் கொள்ளாது, அங்கும் அதற்கு விசேஷார்த்தம் கற்பிக்கப்படுகிறது. அவர்கள் வலிந்து அப்பதச் சேர்க்கை மீது ஏற்றியுள்ள அர்த்தத்தைத்தான் நாமும் சிறுகதை என்ற பதத்திற்குக் கொடுத்து வருகிறோம். இலக்கியத்தில் இது ஒரு துறை. இந்த முயற்சி வெளிநாட்டுச் சரக்காக இருப்பதனால்தான் சாதாரணமான ரசிகர்கள் இது புரியாது என்று சொல்லி, மரபுக்குப் பொருந்தாது என முடிவு கட்டுகிறார்கள். இதென்ன இடையிலே எங்கோ ஆரம்பித்து எங்கோ முடிக்கிறான், எனக்குப் புரியவில்லையே எனச் சொல்வது இயல்பு. ஆனால் அகப்பொருள் துறைகளிலும் புறப்பொருள் துறைகளிலும் பல்வேறு மன அவகாசங்களைக் காட்டி ஒரு காட்சியை, ஒரு கதையைக் கண்முன் கொண்டுவந்து நிறுத்தும் அற்புதமான பாட்டுக்களை நுகர்ந்தவர்கள்கூட, இது புரியவில்லை என்று சொல்லும் போதுதான் விசித்திரமாக இருக்கிறது. சிறந்த சிறுகதைகளுக்கு இலக்கணமாக யாப்பில் எத்தனையோ உண்டு. வசனத்தில் தோன்றியுள்ள இன்றைய சிறுகதைகளைப் புரிந்துகொள்ளாதவர்கள் பழைய காவிய நுகர்ச்சியிலும் அதே நிலையில்தான் இருக்கிறார்கள்.

தமிழில் சிறுகதை என்பது சுமார் ஐம்பது வருஷத்து விவகாரந்தான். செல்வகேசவராய முதலியார் எழுதியுள்ள "அபிநவக் கதைகள்" என்ற சிறு தொகுதியை ஆரம்பமாக வைத்துக்கொண்டு கவனித்தால், இன்று நம்முடைய சாதனை பெருமைப்பட்டுக் கொள்ளக் கூடியதுதான்.

சிறுகதைகள் பிறந்து வளர்ந்த காலத்தை மூன்று பகுதியாகப் பிரிக்கலாம். செல்வகேசவராய முதலியாரிலிருந்து வ.வெ.சு.ஐயர் காலம் வரை ஒரு பகுதி. இதை வெறும்

சோதனைக் காலம் என்று சொல்ல வேண்டும். குறிப்பிடத்தக்க வகைகள் எதுவும் கிடையாது என்று பொதுவாகச் சொல்லலாம். இக்காலத்தில் பிற நாட்டுக் கதைகள், வாய்மொழியாக உலாவி வந்தவைகள், எழுத்தில் அமைந்தன. அவற்றில் பெரும்பான்மையாக ஒரு கதையிருக்கும். அவற்றில் நடமாடும் பாத்திரங்கள் உயிர்பெற்று இயங்காது. ஆசிரியர் அவற்றை இயக்குவதற்காக, சூத்திரக் கயிற்றைப் பிடித்து இழுப்பதுங்கூட நமக்குத் தெரியாது.

இதற்கடுத்தபடியாக வ.வெ.சு.ஐயர் யுகம் என்று சொல்ல வேண்டும். தமிழில் சிறுகதைக்கு உருவும் உயிரும் கொடுத்தவர் அவர்தான். ஒரு விதத்தில் இவரை "சிறுகதையின் பிதா" என்று ஆங்கில மரபையொட்டிக் குறிப்பிடலாம். இவரது கதைத் தொகுதியான "மங்கையர்க்கரசியின் காதல் முதலிய கதைகள்" என்பதிலும் அவர் நடத்திய "பாலபாரதி" என்ற பத்திரிகையில் எழுதிய ராஜகோபாலன் கடிதங்கள் என்பவற்றிலும் அபூர்வமான கதைகள் பல உண்டு. குளத்தங்கரை அரச மரத்தை யார்தான் மறக்க முடியும்? அவருடைய கதைகளில் பாலையின் வெக்கை நம்மைப் பொசுக்கும். முகலாய அந்தப்புரத்து நந்தவனங்களின் வைபவங்கள் நம்மைக் களிப்பூட்டும். கிரேக்க தேசத்துக் கடவுளர் நம்முடன் உறவாடுவர். பிரெஞ்சுப் போர்க்கள ரத்த பயங்கரம் நம்மை மிரட்டும். பிறநாட்டு மரபுகளையும் பெயர்களையும் நம்மால் ரசிக்க முடியாது என இன்றைய விமர்சகர்கள் சிலர் சொல்லிக் கொண்டிருப்பதற்குத் தகுந்த பதில் அவரது கதைகள். இவர் காலத்தில், மாதவையா, சுப்பிரமணிய பாரதியார். ராமாநுஜலு நாயுடு ஆகியோர் கதைகள் எழுதி வந்தார்கள். மாதவையா, உலகத்தைச் சீர்திருத்தும் நோக்கத்துடனே பார்த்ததனால், அவர் விரும்பும் கருத்துகளை வற்புறுத்துவதற்கு சவுக்கியமாக அமைந்த சாதனங்களாகவே கொண்டதால், கதைகள் உயிர்த் தத்துவம் இழந்த வெறும் உபாக்கியானங்களாக அமைந்து விட்டன. அவர் பதிப்பித்த "பஞ்சாமிருதம்" என்ற பத்திரிகையில் சில சிறந்த சிறுகதைகள் வெளிவந்துள்ளன. "மூன்றில் எது?" என்று வெளிவந்தது இன்றும் ஞாபகமிருக்கிறது. டாக்டர் சிகிச்சை, நாட்டு வைத்தியம், கோயில் பிரசாதம் இம்மூன்றில் எது சாகக்கிடந்த குழந்தையைப் பிழைக்க வைத்தது என்பதுதான் கதையின் ஆதாரக் கேள்வி. அதிலே தாயின் பரிதவிப்பு வெகு அழகாக விழுந்திருக்கிறது. எழுதியவரின் பெயர் எனக்கு நினைவில் இல்லை. ஸ்ரீமாதாவையா திடீரெனறு காலமானார். கடைசியாக அவர் பதிப்பித்த இதழில் "கண்ணன் பொருந்தூது" என்ற கதை பிரசுரிக்கப்பட்டுள்ளது. உருவ வார்ப்புக்குச் சிறந்த உதாரணமாக அதைத்தான் சொல்ல வேண்டும். கதைப் பாத்திரங்களின் குண விஸ்தாரமும் கதையின் போக்கும் பிரமாதம். அதில் எழுதியவர் யார் என்று குறிப்பிடப்படவில்லை. நடையைக் கவனித்தால் மாதவையாவே எழுதி இருக்கக்கூடும் என ஊகிக்க இடமிருக்கிறது. ஸ்ரீராமாநுஜலு நாயுடு கதை சொல்லுவதில் சமர்த்தர். பாத்திரங்கள் உயிர்த்தன்மையுடன் இயங்குபவை. பெண்களைப் பற்றி அவர் கொண்டிருந்த கருத்துகள்

விபரீதமானவை. கலையைப் பற்றியும் பெண்மையைப் பற்றியும் டால்ஸ்டாய் விசித்தமைான அபிப்பராயங்களைத் தான் கொண்டிருந்தார். அதற்காக அவர் சிறந்த கலைஞன் என்பதை நாம் மறந்துவிடுகிறோமா? அம்மாதிரியே ராமானுஜலு நாயுடுவை நாம் பாவிக்க வேண்டும்.

இதற்கு அடுத்தபடியாக 1930ஆம் வருஷத்துக்குப் பின் உப்பு சத்தியாகிரகத்தின் இலக்கிய அலையாக ஒரு புது வேகம் இலக்கியத்தில் ஏற்பட்டது. அதாவது எதையும் சிரிக்க சிரிக்க எழுத வேண்டும் என்று ஒரு பாணியை வகுத்து அந்தத் துறையில் சிலர் இறங்கித் திறமைகளைக் காட்ட முயன்றார்கள். இவர்களுள் பிரதானஸ்தர் கல்கி. இவர்களுக்குச் சிரிப்பு மூட்டக் கூடிய தன்மையில் எழுத வேண்டும் என்பதே பிரதான லட்சியம். ஹாஸ்சியச் சுவை என்பது இயல்பாக அமைய வேண்டிய விவகாரமாதலால், வலிந்து கட்டிக்கொண்டு சிரிக்க வைக்க முயலுவது போட்டோவுக்காகச் சிரித்த மாதிரியாகத்தான் அமையும். கல்கியும், பிறரும் மேல் நாட்டு ஹாஸ்ய சாம்ராட்டுகளை மொழிபெயர்த்தும் தந்தார்கள். அவற்றை அனுசரித்தும் ஒட்டியும் பெயர்த்தும் எழுதினார்கள். கல்கி பிராபல்யத்துக்கு வந்தது அவர் சிரிக்க சிரிக்க எழுதுவார் என்பதிலிருந்துதான். ஆனால் பிற்காலத்தில் அவர் சிறு கதைத் துறையில் இறங்கிய பொழுது அவரது எழுத்துக்களில் மருந்துக்குக்கூட சிரிப்பு இல்லாமல் போனதற்குக் காரணம், ஹாஸ்யம் இவருக்கு இயல்பான குணம் அல்ல என்பதுதான். ஆனால் ஹாஸ்யமாக கதை எழுதக்கூடியவர்கள் தமிழில் உண்டு. அவர்களிருவர்: எஸ்.வி.வியும் கொனஷ்டையும். எஸ்வி.வி.யை விட கொனஷ்டையில் கலையம்சம் ரொம்பவும் நயமாக இருக்கும். கதைப் பாணி புதிதாக இருக்கும். இந்த ஹாஸ்ய யுகத்தின் வேகம் ஒடுங்கும் நிலையில்தான் இன்னும் ஒரு பேரலை எழுந்தது. அதில்தான் சிறுகதை தமிழில் பூரண வடிவம் பெற்றது. இதைச் சிறப்பாக மணிக்கொடி யுகம் என்று சொல்ல வேண்டும். இக்காலத்தில்தான் சிறுகதைக்கு இலக்கிய அந்தஸ்து ஏற்பட்டது. பிச்சமூர்த்தி, கு.ப.ரா.பி. எஸ். ராமையா, சிதம்பர சுப்பிரமணியன் முதலியவர்களும் நானும் கதைகள் எழுத ஆரம்பித்தோம். வாழ்வுக்குப் பொருள் கொடுப்பதுதான் கலை. சிறுகதை வாழ்வின் பல சூட்சுமங்களையும் எழுத்தில் நிர்மாணித்துக் காண்பித்தது. "பரமசிவன் வந்து வரங்கொடுத்துப் போவார், பதிவிரதைக் கின்னல் வரும் பழையபடி தீரும்" என்றிருந்த நிலைமை மாறி நிலாவும் காதலும் கதாநாயகனுமாக சோபித்த சிறுகதைகள் வாழ்வை, உண்மையை நேர் நின்று நோக்க ஆரம்பித்தன.

தமிழ் மரபுக்கும் போக்குவரத்துக்கும் புதிதாகவும் சிறப்பாகவும் வழி வகுத்தவர் ஒருவரைச் சொல்ல வேண்டும் என்றால், "மௌனி" என்று புனைபெயரில் எழுதி வருபவரைத்தான் குறிப்பிடவேண்டும். அவரைத் தமிழ்ச் சிறுகதையின் திருமூலர் என்று சொல்ல வேண்டும். அவர் மொத்தத்தில் இதுவரை பத்துக் கதைகள்தான் எழுதியிருப்பார். கற்பனையின் எல்லைக்கோட்டில் நின்று வார்த்தைக்குள் அடைபட மறுக்கும் கருத்துக்களையும் மடக்கிக் கொண்டுவரக்கூடியவர் அவர் ஒருவரே. தமிழிலே "நட்சத்திரக் குழந்தைகள்", "சிவசைலம்", "எங்கிருந்தோ வந்தாள்", "கடவுளும் கந்தசாமி பிள்ளையும்"

என்ற தலைப்பில் வெளிவந்துள்ள கதைகள் ஒப்புயர்வற்றவை. இன்று சிறுகதைகள் வளர்ந்து வரும் லட்சியம். அதன் வரம்புகளையும் சாதனைகளையும் நிர்ணயிப்பது கடினம். இன்று கதைக்கெனவே தமிழில் பல பத்திரிகைகள் வெளிவருகின்றன. அவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு பாணியைப் பின்பற்றி அற்புதமான பயன்களை அளித்து வருகின்றன. இவற்றில் சிறப்பாகக் "கலைமக"ளைக் குறிப்பிடவேண்டும். பிரதானமானவை எனச் சொல்லத்தக்கவை பல அதில்தான் வெளிவந்துள்ளன. இவை தவிர சாதனையை அளவிட்டுக் காட்டுவதுபோல, கோவையாகச் சிறுகதைகள் ஏராளமாக வெளிவந்துள்ளன. அவை இன்றைய நிலைமையை ஓரளவு தெளிவாகப் பிரதிபலிக்கும்.

*****************







புதுமைப்பித்தன்

காலம் வென்ற
மூத்த தமிழ் அறிஞர்,
பரந்துபட்ட ஆய்வு நெறியாளர் மற்றும்
வைணவத்தில்ஆழங்கால்பட்ட இறையன்பர்
ந சுப்பு ரெட்டியார் அவர்களின்
நூற்றாண்டை முன்னிட்டு



படைப்புகளில்

# சிறப்புப் பார்வை

IT IS A NOVEL AND CURIOUS ATTEMPT TO READ HIS SHORT STORIES WITH THE HOPE THAT IT WOULD BRING OUT MORE DIMENSIONS OF HIS CREATIVITY AND EXPERTISE IN STORY TELLING AND ALSO, GET MORE YOUNG READERS OF THE 21ST CENTURY INTERESTED.

Diamond Jubilee (1960-2020)
Department of TAMIL
SRI VENKATESWARA UNIVERRSITY



ISBN 978-81-943850-7-3

